**மின்னூல் பெயர்:** கற்பனையின் உணர்வுகள்
**ஆசிரியர் பெயர்:** காவேரி நாதன்
**ஆசிரியர் மின்னஞ்சல் முகவரி:** nathan.kaveri@gmail.com
அட்டைப்படம் **:** காவேரி நாதன்
அட்டைப்படக் கலைஞர் **மின்னஞ்சல் முகவரி:**
nathan.kaveri@gmail.com

மின்னூல் உருவாக்கம் - த.சீனிவாசன் - tshrinivasan@gmail.com

மின்னூல் வெளியீடு - FreeTamilEbooks.com / கணியம் அறக்கட்டளை

## பொருளடக்கம்

# 1. *கற்பனையின் உச்சம்*

கண்டவுடன் பிடித்தது
கானும் பொழுதே தலை அ(இ)சைந்தது
என் கண்களைக் கவர்ந்தது
உன் நிறமா இல்லை உருவமாயென
எண்ணும் முன்
நலிந்த உன் நெழிவுகளிள்
வழுவிய என் கட்டுப்பாடு
தன்னிச்சயாய் நீண்டது
என் கைகள்
மார்போடு உன்னை அனைத்து
வலக்கையால் வலுவாய் பிடித்து
இடக்கையால் வருடினேன்
என்னத் தொரு துடிப்பு என் விரல் பட்டவுடன்
அதிர்ந்தது உன் சரங்கள் ஸ்வரங்கலாய்
இதை உணர்ந்து வலக்கை விரல்களும் வருடிய பொழுது
சத்தமாய் வந்தது இசை
வார்த்தை இல்லாமல் வந்ததொரு தொடர்பு
இசைக்கும் எனக்கும்
இசையான உனக்கும் (கிட்டார்)

- என் கிட்டார் *(Rk's கவி)*



## 2. *பிரியாவிடை*

காத்திருப்பான்
அடைகாப்பான்
காதினுல் காதலாய்
மனதினுல் மாற்றமாய்
ஆறுதலாய்
துணையாய்
பல கரு வினில்
உருவியெடுத்து
எனக்கென உருகொடுத்து
உயிர் பிரியும் நேரத்திலும்
ஊதிவிட்ட ஊதர்பையாய்
உயர பறக்க விட்டு
உரிமையோடு கட்டிப்போட்ட
நூல் முனையில்
என் அலைபேசியின்
வழி(லி)யே
இசைப்பான் (MUSIC PLAYER) *(Rk's கவி)*



## 3. *வரவேற்பு மலர்*

யாருக்காகவும் காத்திரா நேரம்
காத்திருந்ததடி இந்நேரம்
மெதுவாய் துடித்த கடிகாரமும்
வலியால் துடித்த கழுத்தோரமும்
திரும்பாமல் திமிராய்
மலர்ந்த பூ
வரவேற்பு மலராய்
என் காத்திருப்பு (*(Rk's* கவி*)*

## 4. *காத்திருப்பு*

இரு கையில் அணைக்க உன்னை
இருக்கையில் இருக்கும் என்னை
சோர்ந்து விடாமல் உருண்ட கரும் பந்து
வெள்ளை விழியில்
வெளிச்சம் நீ வரும் வழியில்
ஆவலாய் பார்வை
வார்த்தையின் கோர்வை
படபடவென பதிவிட்ட விரல் நுனி
நீ வரும் காட்சிதான் இனி
வரவேற்கும் கவிதையாய்
என் காத்திருப்பு பதிவு (*(Rk's* கவி*)*



## 5. *அவள் விழி*

கண் எரிச்சலையும் தூர எரிந்து
கண் சிமிட்டும் தன்னிச்சையும் செயலிழந்து
மரத்து போகும் மருந்தை விருந்தாய் ஏற்றிய
பார்வை கொண்ட பாவைக்கு
மாலை இந்த வார்த்தைக் கோர்வை
முடிந்து அணிந்த கவிதை
கண்ணழகி (*(Rk's* கவி*)*



## 6. இதுவும் கடந்து போகும்

மாயை என்று ஆசைப்பட்டு
மனம்போல் இஷ்டபட்டு
உண்மை என்றதும் ஊமையாக
நன்மை நேரும் நாளை எண்ணி
மேன்மை வேண்டி கண்மை போன்று
காற்றில் போகும் நேரம்
கடந்த பாதை மாறா
கடக்கும் பதை வேறா
என கேள்வியோடு
குழம்பி கொண்ட மனத்திற்கு
இதுவும் கடந்து போகும் என்று
முடியாதா முடிவான வரிகள்
என் கவி (*(Rk's* கவி*)*



# 7. *பாதசாரி*

நடந்ததை மறக்க நடந்தேன்
துக்கம் தூரப்போக!
தூக்கம் தேடிவர
சோர்வடைய – சோறுண்ணாமல்,
ஒரே பாதையில் நடந்தால்
ஒரே மாதிரி இருக்குமென்று
வேறு பாதையில்
நடக்க பழகினேன் - கால்களை
நடப்பதை தவிர எதையும் உணரவில்லை
மீண்டும் ஒரே பாதையில் நடந்தேன்
நடப்பது மறந்து கண்களுக்கு விருந்தான - நிலவு
அதை அப்பப்போ மூடி மறைக்கும் மேகம்!
அசைந்தாடும் தாவரம் வரமாய் வந்த காற்று
வியர்வையாய் வந்த வெப்பம் - அதை மண்ணில் விழாமல்
சிதறடித்த தென்றெல்
கண்டதை படம் பிடித்தவன் கண்ணுக்கு பிடித்ததை எடுத்தேன்
என் புகைப்படம் – தெருவோரப்புகைப்படம்
தூக்கியெறிந்த பொருட்களின் அழகு
தூங்காமல் அலையும் பூனை
அந்நாந்து பார்க்கும்படி எழுந்து நிற்கும்
மசூதியின் கோபுரம்
வாசலில் கிடந்த சிம்மாசனம்
சுவர்ச்சித்திரம்
அழகு சாதனக் கடையின் விளம்பரப் பலகையில்
அழகாய் வரையப்பட்ட பெண்ணின் ஓவியம்
ஒளிதரும் விளக்கு
வரிசையாய் வாகனம் - காக்க வைக்கும் சிவப்பொளி
அகண்ட சாலையில் பாதசாரியை கடக்க வைத்த
பச்சை ஒளி
கடந்து சென்ற சாலையின் பதிவான பதிப்புகள்
என் புகைப்படம்
என் கவிதை
என் நடைபயணம்
பாதசாரி (*(Rk's* கவி*)*

# 8. *பரிசு*

போன் பல மாறினாலும்
புகைப்படத்தின் தரம் ஏரினாலும்
போஷ் கொடுக்க துணை கூடினாலும்
புன்னகை நம்முள் என்றும் மாறாதிருக்க
பௌர்ணமியாய் முகம் இன்பத்தில் ஒளிர
தேய்பிரயாய் கரயும் துன்பத்தை கண்டு
வளரும் பிரயாய் நம் சந்தோசதை வேண்டி
கடவுளிடம் எழுதிய துதி
கல்யாண நாள் பரிசு
(ந)அம்பி(க்)கை உன்னோடு (*(Rk's* கவி*)*



## 9. கூறு கெட்டவன்

அறிவென்பது படிப்பில்லை
படிப்பென்பது பதவியில்லை
பதவி என்பது பணமில்லை
பணமென்பது வாழ்கையில்லை
வாழ்கையென்பது பாசம் மட்டும் இல்லை
பாசமென்பது வேசமில்லை
வேசமில்லாமல் வேடமில்லை
வேடமில்லா உனக்கு இங்கு வேலையில்லை
வேலையிருந்தா நிம்மதியில்லை
நின் மதிக்கு இதுவரை ஏன் இது தோனவில்லை
யாரும் நமக்கிதை கூறவில்லை
கூறும் நான் கூறுகெட்டவன்யென
குருதியை தந்தை வனே
கருதியதால் கருத்தாய் வந்த
கவிதை
- கூறுகெட்டவன்(*(Rk's* கவி*)*



## 10. காதலன் [கயவன்]

சொந்த ஊர் சொர்க்கமென்றால்
நரகம் தானே சொந்தமாகும்

பெற்றவர்கள் தெய்வமென்றால்
காண்பதென்பது அரிது தானே

பிறந்த வீடு கோவில் என்றால்
நுழைய யோகிதம் வேண்டுமன்ரோ

விடுமுறை நாட்கள் நிரம்பிவழிய
கண்ணீரோடு
கூண்டைத் திறந்து வெளியே பறவா
கூறுகெட்ட பறவையான
வீம்பெடுத்து விலாசம் தொலைத்த
கயவன் (*(Rk's* கவி*)*



## 11. *பிடிக்காதவன்*

எனக்கான கருவறையை தேடிப்பிடிகாதவன்
தாய் துன்புற ஒருபோதும் அடம் பிடிக்காதவன்
தந்தை பெருமைபட நடந்து கையை பிடிக்காதவன்
கனவுகளை என்றும் துரத்தி பிடிக்காதவன்
இஷ்டம் போல் கல்லூரியைக் கூட தேடிப் பிடிக்காதவன்
மற்றவர் இன்பத்திற்காக எனக்கென
எந்த தேவதையையும் பிடிக்காதவன்
எதிலும் என்னவலின் சுதந்திரத்தை இறுக்கிப் பிடிக்காதவன்
என்னுல் உள்ள ஆசை மனதை ஒரு நாள் கூட கட்டிப் பிடிக்காதவன்
இன்று
ஓடும் கண்ணில் இருந்து கண்ணீரையும் பிடிக்காதவன்
ஆனேன் – பெற்றவளுக்கும் உற்றவளுக்கும்
பிடிக்காதவனாய்
தொலைத்த என்னை
பிடிக்காதவன் (*(Rk's* கவி*)*



## 12. கவிதை

உனக்கென ஒதுக்கிய நேரத்தில் ஒதுங்கி நின்று
உன்னை உருவாக்க நினைத்த எண்ணம் மாற
சுமயாக நீ விரும்பும் நேரத்தில்
இறக்கி வரும்ஆற்றல் கொண்டு
என் துயரங்களை ஆற்ற வந்த
பல கேள்விக்கான விடை
விடைபெராமல் நிர்க்கும்
கர்பனையின் உருவம்
உருவத்துடன் உணர்வை
எற்படுத்திய
என் கவிதை

## 13. *பேருந்து பயணம்*

உயர் மின் கம்பத்தில் மேல் நின்ற புறா
அசைந்து கொண்டே பின்னே சென்ற மரங்கள்
பல வண்ணப் பலகையில் பல மொழியில் விளம்பரங்கள்
வரிசையாய் அடுக்கப்பட்ட வியாபாரத்திற்கான பொருட்கள்
எதிரும் புதிருமாக இருபக்கமும் சென்ற வாகனம்
இவை அனைத்தையும் கண்ணாடி வழியே காணும் என் கண்கள்
வேகமாக சென்ற என் பேருந்து பயணம்
வேகம் குறைக்க வைத்த வேகத்தடை
மூன்று அடுக்கு சாலையில் நடுப்பகுதியில்
மேம்பாலத்திற்கு கீழ் நானும் என் சிந்தனை பாலத்தில்
சென்ற வேகத்தில் தவற விட்ட இறங்கும் இடத்தில்
பலமாய் ஓட்டுனர் மிதித்த பிரேக்கில்
நிரித்திய இடத்தில் இறங்கி
நடந்தேன் மீண்டும் சிந்தனையில்
பழகிய பாதையில்
நம்பிக்கை உணர்த்திய பேருந்து பயணம்.
புறா, விளம்பர பலகை, மூன்றடுக்கு சாலை, சாலை ஓர மரங்கள்,
ஓட்டுநரின் வேகத் தடை.



## 14. *வாழ்க்கை பாடம்*

மற்றவர் சிரிப்பினில் சந்தோஷத்தை கண்ட நான்
முதல் முறை துயரத்தை கண்டேன்
கண்ணாடி கவிதைகள்
வாழ்க்கை பாடம் **#001**



## 15. வெளிநாட்டு அகவல்

சோகமாக இருக்கும் பொழுது
குழப்பமாய் இருக்கும் மனது!
மாறா துயரம் இது என்று
எதுவும் இங்கில்லையென
உணர்த்தும் ஆறுதலாய் மற்றவர்
வாழ்க்கை!
குறைந்த பாரமாய்
கண்ணின் ஓரம் ஈறமான
இரவு உரையாடல்
ஒர் அறையில் இருவேறு மொழியில்
வெளிநாட்டு அகவல்



## 16. *அரும்பு மயிர்*

மூக்கின் கீழ் தோன்றிய புருவம்
என்ன என்று ஆராயும் பருவம்
ஆணாகிய கர்வம்
அனைத்தையும் மறக்கடித்த ஓர் உருவம்
யார் என தேடி
நெளிவும் சுழிவும் கடந்து
நான் கண்ட பாவை
என் பார்வை முன்
மேலே உயர்ந்த புருவம்
கீழே நகர்ந்த கவனம்
காதலா காமமா எனஅறியும் முன்
மெதுவாக பிரிந்த இழச்சிவப்பு உதடு
ஊரிய எச்சிலில் சற்றே தெரிந்த நாக்கு
வரிசையாய் அணிவகுத்த பற்கல்
கூர்முனையில்லா மூக்கு
கண்ணைப் பற்றி எழுத காகிதம் போதாதென
உன் கருவிழியில் தலை கீழாக தெரியும் நான்
வட்டமான மலர்ந்த முகம்
உடம்போடு ஊன்றிய கம்பமாய் கழுத்து
மரமாய் நான் மாற
கிளைகளுடன் காய்த்துள்ள உடம்பு
இத்தனையும் கண்ட பின்பும்
நீ கண்டிரா வண்ணம் திரும்ப நினைக்க
ஏனோ அசையா பந்து - கண்ணுக்குள்
நகலாதிருந்து நகல் எடுக்க
நகர்ந்த உன் பின்னால்
என் இளமை துள்ளிக்குதிக்க
பெண்ணழகையும் மீறிய பின்னழகால்
அசைந்தாடி பின் தொங்கிய குறைவான கூந்தல்

தெரிந்த இடம் வரை தானே நடந்து
தெரியா இடத்தையும் தேடிப்பிடித்து
தேங்கிய நீரில் தேரைப் போல் நான்
என்றும் அங்கேய தங்கியிருக்க
ஏதோ ஒன்று என்னை உன் பக்கம் இழுத்தது
அது எது என
நாட்கள் கடந்து
அர்த்தமும் தெரிந்தது
அபிநயமான என் மோகத்தின் பெயர்
ஆசை
மூக்கின் கீழ் அரும்பிய மயிரின் பெயர்
மீசை



## 17. தனிமை பொழுதுகள்

பிறவியுற்று துறவியாக
தூரப்பறக்க எண்ணமின்றி
தூண்டியதால் தூண்டிலிட்டு
தூங்கும் போதும் துரத்திச்சென்று
தூர்வாரும் உந்தன் எண்ணம்
இன்றியமையா நாளை நம்பி
கடத்திச் செல்லும் நேரம் தவறா
செய்வதொன்றும் அறியாமல்
செதுக்கப்பட்ட எந்தன் உறவாய்
ஒதுக்கப்பட்டு நிற்கும் நாட்கள்
கண்கள் கலங்கி நிற்காவாறு
புரியா வண்ணம் கோர்த்த வார்த்தை
புரியவைக்கும்
என் வருத்தத்தை
தனிமை பொழுதுகள்.



## 18. *பட்டவன்*

அசிங்கப்பட்டு
ஆத்திரப்பட்டு
இழிவுப்பட்டு
ஈனப்பட்டு
உலுக்கப்பட்டு
ஊதப்பட்டு
எழப்பட்டு
ஏக்கப்பட்டு
ஐயப்பட்டு
ஒழியப்பட்டு
ஓடப்பட்டு
தமிழின் உயிரெழுத்தாய்
இந்த வாழ்க்கையோடு வாக்கப்பட்டு
பட்டென பட்டுப்போகாமல் பக்குவப்பட்டு
ஏனோ பட்டுக்கொண்டே பயணப்பட்டு
கந்தல் ஆனாலும் தரம்தாழா பட்டு
- பட்டவன் (BUT அவன்???)



## 19. குருடன்

குருடனாய் இருந்தது
கண்மூடி இருக்கையில் தெரிந்தது
உறவாய் யாரும் இல்லையென்று
ஒரு சொட்டு மருந்து உணர்த்தியது
ஏனோ கண்கள் உருத்துதென்று
மருத்துவமனையில் நான் அமர்ந்து
மருந்தை வாங்கிய கையுடன்
மடியில் சாய்க்க யாருமின்றி
ஈரப்பதம் இல்லா கண்கள்
கலங்கி பயனில்லையென்று
உணர்த்திய காத்திருப்பு
கண்ணில் விட்ட சொட்டு
கரைந்து தொண்டையில் இறங்குவதுபோல்
கசப்பாய் உணர்ந்த
தவறான முடிவுகள்
தனிமை பொழுதுகள்.



## 20. இரட்டை அர்த்தம்

ஓர் வார்தையில்
ஒரு அர்த்தம்
புரிவதில் - பெருமை
ஓர் வார்த்தையில்
இரு அர்த்தம் புரிவது
நட்பின் அருமை
புரியாமல் உணர்வது காதல்
உணராமல் கொணர்வது காமம்
புரியவைத்து உணர்த்துவது
ஒரே குட்டையில் ஊரிய மட்டைகளின்
*இரட்டை* *அர்த்த* *வார்த்தைகள்*
கேட்ட வார்த்தைகலோ
கெட்ட வார்த்தைகலோ
முல்லாக வரும் வார்த்தைக்கு நடுவில்
முட்டு போல் உள்ள முகத்தை
பட்டென மலரவைத்த

## 21. என் தேவதை

எனக்காக வந்த தேவதையே
என்றைக்கும் எனக்கு தேவை நீயே
உனக்காகவே நான் உயிர் வாழ
காரணமாய் வந்தாய் - நீயே
கூட்டமாய் பலரும் வேசமிட்டு
கோஷத்துடன் மோசம் செய்ய
பாசமாய் என்னை அதிலிருந்து
சிறு துளிக் கண்ணீரில் மிதக்க விட்டு
இடியாய் வந்த கஷ்டம் யாவும்
இனிமையான மழைக்கென்று
நனைந்த பின்னே நானுணர்ந்தேன்
கழுவிய சாலையில் நான் நடந்தேன்
எங்கும் என்றும் எதிலும் இதிலும்
உன் துணை நான் நாட தேவையன்றி
இன்றியமயா என் நம்பிக்கையே
உன் அருளால் என் வாழ்க்கை மெய்யே!

## 22. *திடீர் மழை*

எதிர் பார்த்த ஒன்று
எதிர்பாராமல் இன்று
சாரல் கூட போது மென்றேன்
கொட்டி தீர்த்து குளிர வைத்து
மொட்டை தலையையும் நனைய வைத்து
கண்ணீர் விட நான் மறந்து
தண்ணீர் தெளித்த மலர் போல
மலர்ந்த கண்ணில் உனை காண
என்நேரமும் எதுவும் மாறும் என
எனக்கு உணர்த்திய திடிர் மழை

## 23. வா

ஒரு நாள்
என் கூட நீ வா
தாயும் வேண்டாம்
தாலியும் வேண்டாம்
தங்கமும் வேண்டாம்
தங்க வேண்டும்
உன்னோடு
தாலாட்டி உணவூட்டி
தலை சாய்ந்து மடிமீது
உறங்கிட வேண்டும் உயிரோடு
மன்னின் மேல் விண்ணின் கீழ்
இன்றை மறந்து சகலம் திறந்து
வாழ்ந்திட வேண்டும் உன்னோடு
வந்திடு நீயும் என்னோடு



## 24. குறும்பு

என்றோ விதைத்த கரும்பு
நன்றாக விளைந்த பின்
சுவைத்தால் இனிப்பதுப்போல்
நினைத்தாலே இனிக்கும் ஓர் குறும்பு
ஆண்டுகள் பல ஆனபோதும்
என்றும் என்னை பாலகனாய் கானும் நட்புடன்
உரையாடலின் துலிர் பெற்ற இறந்த காலம்
பள்ளிப் பருவத்தில்.



## 25. *இறைவி*

என் இனியவளே
என்றும் இன்றும்
இன்பம் தருபவளே
இன்றியமையா
இருளுக்குல் இருக்கும்
இறையருளே
என் இறைவியே

## 26. *மகனானத் தகப்பன்*

தந்தை என்னும் சொல்லுக்கு தகப்பனாக
தலைமேல் ஏற்றி உயரம் காட்டி உயர்ந்த
உன்னத உறவு
நான் கானா உயரம்
நீ காண எண்ணி
மாறிய ஏணி
அனைக்க விரித்த கைகள்
உன்னை பறக்க வைக்க விரிந்ததென்று
உணர்த்தும் உயரம்
மறைந்த சூரியன்
ஒளியாய் நீ எழுவது கண்டு
எப்பொழுதும் நான் இருப்பதுண்டு
எழுத எழுத ஊற்றாய்
கொட்டும் வார்த்தைகள்
வற்றாமல் வடியாமல் தொடரும்
மகனான – தகப்பன்



## 27. எதிர்மறை வாழ்க்கை

கோபம்
சாபம்
பழி
கெடு
கேடு
கஸ்டம்
கவலை
கர்மா
ஆப்பு
விதி
சோதனை
பொறாமை
துன்பம்
தனிமை
கண்ணீர்
பிரிவு
இழப்பு
தூரம்
துயரம்
எதிர்ப்பு
ஏமாற்றம்
இயலாமை
சோம்பல்
கூடாநட்பு
துரோகம்
வஞ்சம்
பகை
திமிரு
திருட்டு

பொய்
என அனைத்தையும் மூச்சு விடாமல் படித்து
இன்னமும் வார்த்தைகளை தேடும்
என் எதிர்மறை கவிதை
என் வாழ்க்கை
என் நம்பிக்கை



## 28. சந்தோஸம்

உடைந்து விடாமல் என்னை
ஒட்ட வைக்க
வேண்டும் சந்தோஸம்
சந்தோஸம் என்றால் என்ன
போதை தரும்
பேதை மனம்
யாதும் அரியா
ஓர் ரகசியம்
பேசும் விழியும்
பார்க்கும் செவியும்
சுவாசிக்கும் வாயும்
கேட்கும் மூக்கும்
அனைத்திற்கு முன்னே
எந்த உருப்பு பயன்பெரும்
சந்தோஸத்தினால்
எந்த உருப்பு அதை தரும்
பயனுருவதால்
உருப்பா
உணர்வா
வேதியலாய் ரசாயன மாற்றம்
விலங்கியலாய் உருப்பின் உணர்ச்சி
கணிதமாய் உறவின் கூட்டல் பெருக்கல்
இயற்பியலாய் உயர் நிலையின் புவியீர்ப்பு
உளவியலாய் மனதின் மாற்றம்
உருவமில்லா ஒன்று
உருவானதின்று ஓர் முடிவில்
கவிதையாய் சந்தோஸம்.

## 29. கட்டுப்பாடு

பார்த்து ரசித்த உன்னை
பக்குவ பட்ட பின்
பயங்கர நிகழ்வுக்கு பயந்து
விரிசல் இல்லாமல் விலகிப்போக
விரிவான திட்டமிட்டேன்
திட்டம் யாவும் தவுடாக
உன்னை கண்டதும்
தண்ணீரில் கரைய
பசியுடன் உள்ள பசு
அரைக்காமல் விழுங்கியதுபோல் ஆனபோதும்
எப்போதும் போல் பாராமல் அப்பப்போ பார்ப்பதில்
தவறில்லையென தன்னை தானே தேற்றிக்கொண்டேன்
நுயூட்டன் விதியும் பொய்யா வண்ணம் சிறு பொழுதிலே
எந்தன் கட்டுபாடு விட்டுபொடுயென
புலன் அனைத்தையும் புலம்பச்செய்தாய்
புலன் ஒவ்வொன்றாய் கட்டலையிட்டு
கண்ணிலிருந்து உணர்ச்சி வரை
ஒவ்வொரு நொடியும் உன்னை காணா வண்ணம்
கனா கூட கானாத நிஜமான பொழுதுகள்
என் உணர்ச்சியுடன் நானே சண்டையிட
ஒவ்வொரு நொடியும் ஜெயிப்பது என்னவோ
நீ தான்
கண்டதால் வந்த வியாதியை
உன்னை காணாமல் இருந்தால் போகும் என்று
உன்னை காண திருப்பதே வியாதியென
கட்டுபடுத்த பட்ட சலனப்படும்
சர்க்கரை வியாதி வந்தவரின் எண்ணம்
இனிப்பில்லா சர்க்கரையுடன்.

## 30. உணவருந்திய நேரம்

என்னதோர் சக்தி எனக்குள் தானே
உன்னுடன் நானும் வாழ்கின்றேனே
பாதை சொல்லி நானும்
கை கோர்த்து நாமும்
உதடு ஒட்டா சிரிப்பும்
ஊமையான நடப்பும்
உணவகத்தில் அமர்ந்து
உனையே அனுதினமும் நுகர்ந்து
குவலையில் நிரம்பி வழிந்து
நீர் ஊற்றுவது மறந்து
நான் கொஞ்சம் நகர்ந்து
உன் அருகில் இருந்து
வாசித்த உணவு பட்டியல்
உன் உணவை நானும்
என் உணவை நீயும்
ஆடர் செய்வோம் என்று
ஒரே உணவை இருவரும் கூர
அதிர்ந்த சர்வர் வேற எதுவும்
என கேட்க
சாப்பிட்டு சொல்ரோம் னா என நீயும் கூரி
உணவு வரும் வேளைவரை உணவான
நம் உரையாடல்
நல்லா சாப்பிட சொல்லி நான் உனைக் கேட்க
கேட்காமல் எந்தன் தட்டில் நீ பகிர்ந்த உணவயும்
நானே சாப்பிட்டு
நீர் பருகும் நேரம்
புரையேரி நான் தும்ம
தலையில் தட்டி தண்ணீர்தர

காணவில்லை

உன்னை
தொலைத்தேன் என்னை
உன் நினைவால் நான் புரையேறி
நிரம்பி வழிந்தது நீர்
கண்மனியே
என்னதோர் சக்தி எனக்குள் தானே
தன்னிலை மறந்து உன்னுடன் கலந்து
உண-வருந்திய-நேரம்


## 31. செருப்பில் மிதித்தேன் சிகரெட் துண்டை

ஏன் பிறந்தேன் என நானிருக்க
என்னுடன் என்றும் நீயிருக்க
காலமெல்லாம் வா என்றேன்
காலணியாய் நினைவுடன்
நான் இருப்பேன்யென
பரிசாய் தந்த காலணி (செருப்பு)

வெனயாய் வந்த வெள்ளைக்காரன்
விரல் நடுவே இருப்பது
தாற்காலிகம் என நினைக்க
தன்னை அழிப்பதாக புகையை விட்டு
பிடித்தவனையெல்லாம் அழிக்கும்
பழக்கம்
வழக்கமாய்க் கொண்டு
முழுசாய் எரிந்த பின்
எஞ்சிய பஞ்சை
வீசி எறிந்து
தூரச்சென்றும் அணையா நெருப்பு
பற்றிக் கொள்ளாமல்
பரவி விடாமல்
எரிகின்ற நெருப்பை
ஏறி மிதித்து அனைத்தேன்

புகையடித்த  தொண்டை வறட்சிப் போல்
காய்ந்த என் தொண்டையை
ஈரமாக்கிய விழுங்கிய கண்ணீர்
பரிசாய் வந்த காலனியில்
பற்றவைத்த பஞ்சை மிதித்ததால்
உயிரற்ற காலணிக்கே

உணர்வு தரும் காதலால்
உயிருடன் உள்ள உதட்டைப் பற்றி
உருண்ட உன்னை ஊதும் பொழுது
உசுரே போகும் என்பது பற்றி
அனைத்தும் தெரிந்தும் எதிர்வினை செய்யா
வாயுனுல் இருக்கும்
கசந்து போன எச்சிலாய்...

மறக்காமல் புகைபிடித்து
மரத்து போகும் நாக்கைப்போல்
படபடக்கும் நெஞ்சம்
உன்னை தொட துடிக்கும்
வேட வேடக்கும் விரல்கள்
அதை
கண்டு வெருப்பாகும்
வேடிக்கை பார்க்கும் என் கண்கள்
உன்னை தொடாமல்
என் விரல் சிறிதளவும் உன் மேல் படாமல்
புகைக்க அறவே பிடிக்காதிருந்தும்
என் மூச்சுக் காற்றை மாசுப்பாடுத்தும்
உன்னைக் கண்டு
விலையில்லா வியாதியை
வீதியிலே தரும்
புகைப்பிடிப்போறை எட்டி உதைக்க
மனிதை உறிமை மீரல் என்று
இன்னும் அனையாமல்
எரிந்து கொண்றிருக்கும்
பற்ற வைத்த பஞ்சை
செருப்பில் மிதித்தேன் சிகரெட் துண்டை

- செயலற்ற புகைபிடிப்பவர் (Passive Smoker)

## 32. ஆறு முதல் ஆறறை வரை

அயர்ந்த உடல்- தரையில்
புதைந்த தலை - தலையணையில்
சிலிர்த்த மேனி - மிதமான குளிரில்
இழுத்த கைகள் - விலகிய போர்வையை
ஒன்றன் மேல் ஒன்றாய் - பின்னிய கால்கள்
இருக்கி சாத்திய - இமைகள்
கனவில் மிதந்து
நினைவையும் கலந்து
அனைத்தையும் கலைத்த
ஆறு மணி அலாரம்
சேவியுனில் நுழைந்து
மூளையை குடைந்து
அலறும் - ஒலி
சட்டென்று சீறி
பட்டென்று அனைத்த - விரல்கள்
விலகிய போர்வை வழியே
செவியால் பார்த்த நேரம்
சூரிய ஒளியோ ஜன்னலின் ஓரம்
ஊடுரும் வெளிச்சம்
மறுபடியும் அலறிய
நான் வைத்த அலாரம்

உபரி தூக்கம் போதுமென்று
கூவியது செவியோரம்
எழ மறுத்து திரும்பி அனைத்த
நன்பனாய் சோம்பல்
எதிரியான அலாரம்
கடைசி அலாரத்தையும்
அமர்த்திய விரல்கள்

முலித்திட்ட மூளை
மங்கலான பார்வை
தள்ளாடிய கால்கள்
அசைந்தாடி சென்று
கடந்த கனவையும்
நிகழ்ந்த நினைவயும்
மதியில் அசைப்போட்டுச் சென்ற
அறை மணி நேரம்
அதிகாலை
ஆறு முதல் ஆறறை வரை – ***RK's*** கவி***.***

